8th September 1960]

**THE HON. SRI M. A. MANICKAVELU** : ஆத்தூர் தாலூகாவில் முதலில் ரிசர்வ் ப்ளாக், சும்மா இருந்த நிலத்தை பயிர்செய்யக் கொடுத்தால் நன்றாயிருக்குமென்று கொடுத்தோம். அப்படிக் கொடுத்தும் பிரயோஜனமில்லை. ஆகவே, இப்படி பலன் அடையமுடியும் என்று யோசனை செய்து கூட்டுறவு பண்ணையாகவா அல்லது வேறு விதத்தில் செய்யலாமா என்பது யோசனையில் இருக்கிறது.

*Language test*

* 547 *Q.*—SRI M. P. SUBRAMANIAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government after the Reorganization of States had abolished the language test in languages other than Tamil for State and Subordinate Services ;

(*b*) if so, why was it not given effect to by the Medical Department with regard to nurses; and

(*c*) the reasons for the delay?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes.

(*b*) It has been given effect to.

(*c*) Does not arise.

*Rural Housing Scheme*

* 548 *Q.* SRI **A. VEDARATHNAM** : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் ஹைதராபாத்தில் நடந்த ஜாகை மந்திரிகள் மகாநாட்டில் கிராம ஜாகை திட்டம் பற்றி என்ன முடிவு செய்யப்பட்டது ?

(ஆ) இம்மாநிலத்தில் அம் முடிவு எப்போது அமுலுக்கு வரும் ?

(இ) இதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

(ஈ) ஹைதராபாத் மகாநாட்டின் முடிவிலிருந்து எவ்வளவு தொகை அதிகரிக்கப்பட்டிருக்கிறது ?

**THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) A copy [a] of the recommendations of the Housing Ministers' Conference held at Hyderabad in 1959 relating to the Village Housing Projects Scheme, is placed on the Table of the House.**

**(*b*) The Government of India communicated their decisions on these recommendations in June 1960 and orders have since been issued for the implementation of the scheme in this State in accordance with the decisions of the Government of India.**

(*c*) A sum of Rs. 70 lakhs has been set apart for the Second Plan period.

**(*d*) There has been no increase in the Plan allocation, consequent on the decisions of the Conference.**

---

(*a*) Printed as Appendix III on pages 496—497 *infra*.

**SRI M. P. SUBRAMANIAM :** இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 70 லட்சம் ரூபாய் கிராமப் புறங்களில் வீடு கட்டும் திட்டத்திற்காக ஒதுக்கப் பட்டதென்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அவைகளில், எந்தளவு நாம் இதுவரையில் வீடுகள் கட்டியிருக்கிறோம். எந்த அளவு செலவு செய்திருக்கிறோம் என்று கூறமுடியுமா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** இந்தத் திட்டம், மத்திய அரசாங்கம் போட்டதில் 50% தான் கடன் கொடுக்கமுடியும் என்று அவர்கள் விதிகள் நிர்ணயித்தார்கள். சென்னை ராஜ்ய சர்க்கார் வைத்திருக்கிற கூட்டுறவு திட்டத்தில் 30% நாங்கள் கடன் கொடுக்கிறோம். ஆகவே இந்தத் திட்டத்தின்கீழ் அதிகமாக யாரும் வீடு கட்டுவதற்கு கடன் வாங்கவரவில்லை. இதற்குப் பதிலாக கிராமங்கள் எல்லாவற்றையும் சர்வே செய்து மாஸ்டர் ப்ளான் முதலியவைகள் தயாரிக்க ராஜ்ய சர்க்கார் 5,94,000 ரூபாய் சாங்ஷன் செய்திருக்கிறது. 2½ லட்சம் வரையில் பட்டுவாடாவாகிவிட்டது. சற்றேறக்குறைய வீடுகள் 616 கட்ட ஏற்பாடாயிருக்கிறது.

**SRI A. VEDARATHNAM :** மேஜைமீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையில் ட்ரைபல் ஏரியாவில் வீடுகள் கட்டுவது பற்றி குறிப்பிடப் பட்டிருக்கிறது. சில கண்டிஷன்ஸ் பேரில் வீடுகள் அமைக்கவேண்டியிருக்கிறது. ட்ரைபல் ஜனங்களுக்கு பாதித் தொகை அவர்கள் கடனாக வாங்கி பாக்கியை அவர்கள் போட்டுக் கட்டுகிற நிலைமையில் அவர்கள் இருக்கிறார்களா ? எனவே அவர்களுக்கு சலுகை கொடுக்க, விதிகளில் விசேஷ சலுகைகள் காட்ட அரசாங்கம் முன் வருமா ? இப்படிக் கட்டப்படுகிற வீடுகளுக்கு ஏதாவது டைப் "டிஸைன்" அரசாங்கத்தினிடம் இருக்கிறதா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** மலைஜாதியினருக்கு வீடு கட்டும் திட்டம், இந்தத் திட்டத்தில் அவர்களுக்கு வசதியில்லை. 50% கடன் கொடுத்து 50% அவர்களே போட்டுக் கொள்ளவேண்டுமென்று சொன்னால் அவர்களால் போட்டுக்கொள்ள முடியாது. அவர்களுக்கு வேறு திட்டங்கள் மூலம் வீடுகள் கட்டிக்கொடுக்கப்படுகிறது. கிராமங்களில் சர்வே செய்து, பொது வசதிகள் செய்வதற்கான வழிகளையெல்லாம் இதன் மூலம் செய்யமுடியும்.

**SRI A. GOVINDASAMY :** கிராமங்களில் வீடு கட்டும் திட்டத்தில், ஓரேயிடத்தில் மனைகள் இருக்கவேண்டுமா ? அல்லது வெவ்வேறு இடங்களில் இருந்தாலும் கொடுக்க அரசாங்கம் யோசிக்குமா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** முதன் முதலில் போட்ட திட்டத்தில் ஒரேயிடத்தில் மனைகள் எல்லாம் இருக்க வேண்டுமென்று விதிகள் போட்டிருந்தார்கள். அவற்றையெல்லாம் தளர்த்த வேண்டுமென்று ஹைதராபாத்தில் நடந்த மகாநாட்டில் சிபார்சு செய்யப்பட்டது. அதை சர்க்கார் இப்பொழுது ஏற்றுக்கொண்டிருக்கிறது.

**SRIMATHI A. S. PONNAMMAL :** கிராமப்புறங்களில் வீடு கட்டுவது 'ரூரல் ஹௌஸிங் ஸ்கீமின் கீழ் வீடுகள் கட்டிக் கொள்ளுங்கள் என்று சொன்னால் அவர்கள் கூறுகிறார்கள்., என்ஜினியர்கள் சிறு சிறு அறைகளாக கட்டச் சொல்கிறார்கள், அப்படிக் கட்டினால் பிள்ளை குட்டிகளை வைத்துக் கொண்டு இருக்க வசதியாகயில்லை. ஆகவே இந்த ரூல்ஸ் அன்ட் ரெகுலேஷன்களை ரிலாக்ஸ் செய்து பெரிதாக கட்டிக்கொள்ள அவர்களுக்கு சலுகை கொடுக்கும் முறையில் அமைந்தால் நலமாகயிருக்கும். ஆகவே அப்படிச் செய்ய அரசாங்கம் முன்வருமா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** இந்தத் திட்டம் மக்களுக்கு விரும்பத் தக்கதாகயில்லை என்பதை ஒத்துக்கொள்கிறேன். ஏனெனில் அதிலுள்ள விதிகள் எல்லாம் மிகவும் நெருக்கடியாக இருக்கின்றன. அதை தளர்த்துவதற்குத்தான் சர்க்கார் முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறது.